உ

கடவுடுணை.




சேழுகை

ஸ்ரீமான் உரிச்சொல் நிகண்டாசிரியர்

காங்கையங் கிளார் மகன்

சேங்கிளார் இயற்றிய

# செழுகைத் தஞ்சக்கோவை.

இஃது

தூத்துக்குடி கால்ட்வெல் உயர்தரப்பாடசாலை

பிரதம தமிழ்ப்பண்டிதர்

இ. சங்கரசுப்புபிள்ளையவர்களால்

பரிசோதித்து

முடித்தானேந்தல் சு. அருணாசலம்பிள்ளையவர்கள் மகன்

பேச்சிமுத்துப்பிள்ளையால்

வெளியிடப்பட்டது.

N. சிவகுருநாத பிள்ளையால்

தூத்துக்குடி

சைவப்பிரகாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1912.

சிவமயம்.

# நூற்சுருக்கம்.

---

சுத்தப்பிரமத்தினடியராய்ப் பேரேறிய நாகரீகத்தோடு சிருஷ்டிகாலந்தொட்டுக் கங்காதீரத்தில் வசித்து, கிருஷ்ணபகவானுக்குமுன் (கி. மு) 8 வது நூற்றாண்டில் சிந்துதீரத்தைக்கண்டு ததிசிமுனிவரின் மனைவி அனுஷ்டை யென்பவளால் முத்தேவர்களைக் கல்லாக்குங் கற்புடைய குடும்பத்தினராய் பிரளயகாலத்தில் தப்பி, சிக்குநகரத்தில் வசித்து பரத்துவாசருடைய உத்திரவின்படி கி மு. 300-வருஷத்தில் கற்புக்கோட்டையுடன் மதுரையிற் குடியேறி, தென்தேசத்துக்கரசர்களைத் தெரிந்தெடுக்குமதிகாரம் பெற்று, கி. பி முதல்நூற்றாண்டில் குலசேகரபாண்டியனால் கொற்கைமாநகரில் குடியேறி, சுகுணபாண்டியன்வரை 21 தலைமுறை அநேக அற்புதங்களோடு தென்னாட்டைக்காத்து கி. பி. 13-நூற்றாண்டில் கடலழித்த மதுரையிலிறந்துபோன பாண்டியர்க்குப்பதிலாக அக்காசாலையில் அக்கினிமாமுனிவரால் புத்திரகாமேஷ்டி யாகஞ்செய்து சித்திரவிரதனென்னுந் தென்னன் சேரளன், வளவன் ஆகிய மூவரையுந் தேவகன்னியரிடத்துப்பெற்று மண்கொண்டார், முடிகொண்டார், கொடிகொண்டாரென்னும் முக்கிழார் வீட்டில் வளர்த்து, முக்காணியில் கி. பி. 15 நூற்றாண்டில் முடிசூட்டி பிரதாபமார்த்தாண்ட பாண்டியன்வரை இராஜமைச்சாதிகாரத்துடன் வாழ்ந்து கி. பி. 21 நூற்றாண்டில் விக்கிரமபாண்டியனை விரோதித்து, யதுலவிக்கிரமபாண்டியன் காலமாகிய 22 நூற்றாண்டில் செழுகையிற்குடியேறி, தங்களைவேண்டிய கீர்த்திபூடணனுக்கு அரவான் மதுரையை ஸ்தாபித்து, 63ந்தலைமுறை முக்கிலேசனா லதிகாரங்குறைந்து செழுகைப்பஞ்சத்தில் குண்டாற்றில் தண்ணீர் கொண்டுவந்த விக்கிரமவாகுவின் விலைமகண் மகனுக்குப் பட்டமும் பெண்ணுங் கொடுக்கும்படி விக்ரமபாண்டியன் தீர்ப்பளிக்க, கர்னகடூரமான இத்தீர்ப்பினால் மனவருத்தமுற்று அவன்கேட்ட அப்பெண்ணை ஏழுதடவை செழுகைப்புலியீசர் முன்புக்கு அக்கினிப்பிரவேசஞ்செய்ய, அவ்வேழு தடவையுஞ் சர்ப்பமுதலிய ஏழுதடைகளால் அக்கற்பரசியை நீக்க, எல்

லாரும் ஈஸ்பர செயலைப்பார்த்துத் திகைத்துநிற்கையில் சாங்கையர் மகன் செங்கிளாரென்னுமோர் வித்துவான் மெய்ப்பொருளாகிய செழுகேசரை நோக்கி, அவரது சிறப்பையும், தாங்கள் அவர் கிருபையாலடைந்திருந்த பெருமையையுஞ் சொல்லிப்புலம்பி அப்பெண்ணையும் அப்பெருமானது திருவடிக்கே தஞ்சமென ஒப்பிவித்து நடுராத்திரியிலேயே கொற்கைமாநகரத்தை யடைந்தனர். இவ்விஷயத்தைச் சொல்லும் நூலே தஞ்சக்கோவையாகும்.

அருந்தமிழறிந்த வன்பர்களே! மகா-௱-௱-ஸ்ரீ கனம் மு. அருணசலபாண்டியம்பிள்ளையவர்கள் இந்நூலின் ஏட்டுப்பிரதியொன்றை யென்னிடமீய்ந்து தப்பறச் சோதித்தச்சியற்றுமாறு வேண்டினர். அஃதாதியிதுகாறும் இரண்டு மூன்று பிரதிகள் சேர்த்துப் பரிசோதித்துச் சில புண்ணியவான்களின் பொருளுதவியாலும், என் நண்பர்களான S. A. பேச்சிமுத்துப்பிள்ளை, S. குமாரமுத்துப்பிள்ளையவர்களின் விடாமுயற்சியாலும் இந்நூலையச்சிட்டிருக்கின்றனம்.

இங்ஙனம்,

**I. சங்கரசுப்புபிள்ளை,**
தமிழ்ப் பண்டிதர்
கால்ட்வேல் ஹைஸ்கூல், தூத்துக்குடி.



உ

சிவமயம்.

# செழுகைத் தஞ்சக்கோவை.



## காப்பு.

சீரார் சுயம்புச் செகதீசர் பாதந் தினந்துதிசெய்
காராளர் கன்னிப் புலியீசர் கோவிற் கடுந்தழலில்
சேராகச் செம்புப் படத்தேட்டின் முன்ன நிகழ்ந்ததெல்லாம்
பாரார்க்குச்சொல்லுஞ் செழுகேசர் கோவையைப் பாடுவமே.

பாடும் பெரும்புகழ் கொற்கைகொண்டார் குடிப்பாண்டவர்பின்
நாடும் பலதுரைப் பாண்டியரோடு நடந்தவெல்லாம்
தேடும்புலவ ரொருநூலிற்காணச் செழுகையரைச்
சூடுங்கவித்துரை கலந்தே நடந்ததைச் சொல்லுவமே.

## நூல்.

மூந்நாளரியயன் சிவனென்று கூறிடு மூவரையுங்
கன்னாட்டிவைத்தநற் கனிட்டையின் வழிவழிக் காரிகையை
இந்நாட்டிற் கூத்த னிடும்புக்குத் தீமுன்ன ரேற்றிவைத்தோம்
பொன்னாட்டி தஞ்சம் புலியீசர் செழுகையிற் போவதுமே. (1)

பெண்டாட்டிகொண்ட கைச்சோற்றுத்தானம் பிறளுமுன்னே
கொண்டாடுமாலி னணியெலாங் காட்டினிற் கொள்ளைகொண்டு
உண்டாடிருமங்கை யாழ்வார் குலக்கொடி யொப்பாமிவளைத்
திண்டாட்டமன்றிச் செழுகேசர் தஞ்சத்திற் சேர்க்கணுமே. (2)

வீடுமன்றன்னைத் தடுத்தாண்டபோது விரிந்தகங்கை
காடுங்கரையு மழித்தே முடித்திடுங் காலமதில்
நாடுந்தநிசியைக் கண்டே நரனெனு நாமமதைச்
சூடுங்குலக்கன்னி தஞ்சஞ் செழுகையிற் சூட்சமற்கே, (3)

கோவேந்தர்வாழ நான்மாடக்கூடல் குடியேற்றிவைத்து
ஏர்வேந்தர்வாழுங் குடகாடு கொற்கையை யெமக்காகவைத்த
பூவேந்தர் பொற்கை குலசேகரனுக்குப் புத்திசொல்லும்
பாவேந்தர் கன்னியை நீயே றுன்றஞ்சமும் பாரமுமே. (4)

நாடாளுந் தென்னர்க்கு மாமுடி சூட்டவு நல்லமைச்சு
தேடாமற் சொல்லவுந் திரவியஞ் சேர்க்கவுந் தெவ்வர்களை
யோடாம லோட்டவும் பெற்றோ மிதுவரை யுயருறு பெண்
சூடாமலர்புலிச் செழுகேசர் தஞ்சத்திற் சூட்டுவதே. (5)

வன்னிக்குணின் று வருமாமுனியருண் மைந்தர்களாந்
தென்னர்க்குங்கேரள வளவர்க்குமுக்கிளை செய்தவர்கண்
மன்னர்க்குமூன் று முடிசூடுங் கோத்திரர் மாமகளாம்
பொன்னிகருத்தஞ்சஞ் செழுகேசர் தாளிணைப் பூமலரே. (6)

தாளாத தென்னர்க்கு மாமுடிசூட்டுந் தமிழ்ச் செழுகை
வேளாளர் தென்பொதி காசலநீரில் வெள்ளி செம்பொன்
கோளாகச் செய்திவ் வுலகெலாங் காக்குங் குலக்கன்னியரைக்
கேளாது கேட்டதி லுனக்கே விடுத்தனங் கேவலமே. (7)

கோடானு கோடி கொலைசெய்த மாளவக் கோமகனைக்
கோடாரிக் கோடி நுனிக்கே விருந்திட்ட கோலமுள்ளார்
வாடாத பூமலர் வாடவுன் கூத்தன் மகிழ்ந்திடவும்
நாடாத கன்னியுன் தஞ்சஞ் செழுகையி னுயகமே. (8)

பசுமேய்க்கும் பட்டி மகன்செத்தபாவம் பசுவடிதன்
சிசுமாய்த்துப் பாலுக் குதிரங்கொடுத்த செழுகையுள்ளார்
கசுமாலப் பட்டுமித் தழன்முன்பு வைத்தபொற் கன்னிதன்னை
வசுவாகதி வைப்பையோ வென்செய்வையோபுலி வாழ்பவனே (9)

செங்கையார் மானு மழுவோடு பூதியுஞ் சேய்மதிநீர்க்
கங்கையார் வானு மபிடேகபாண்டியன் காலமதில்
நங்கையா ரென்று திருவாக்களித்தவெங் நக்கர்பிரான்
மங்கையாடன்னை யுன்றஞ்சத்தில் வைத்தன மானவனே. (10)

மாலோற்கு பின்பு வாறு நூற்றாண்டினில் வையமெல்லாங்
காலாக்கினியுறக் கடல்பொங்குமென றொரு கப்பல்தந்து
நூலாக்குமெண்மரும் பலவுயிர்காத்தநின் னுண்ணறிவின்
பாலாகுங் கன்னியை யென்செய்வையோ தஞ்சம்பாடுவமே (11)

நான்மாடக் கூடலில் விக்கிரேசபாண்டிய னடத்துஞ்செங்கோல்
மான்மாடக் கோவிற் றிருவருளாற் கொற்கை மறுத்துவைத்த
வான்மாடச் செங்கண் ணிரைந்தாரின்சேகரம் வைத்தபுவி
தான்மாறுங்கன்னி செழுகேச தஞ்சநின றாளிணையே. (12)

புவியோர்க்கு வேண்டும் பொருளெலாந்தேடும் புரவலன்றன்
அவியாதசித்தம வையரான்மாரை யழைத்துவந்து
கவிநான்கு நாற்குல மைந்திணை தன்னைக கலந்துவைத்த
தவநாளுமல்லவிக் கன்னி நின்றஞ்சந் தயாபரமே. (13)

எல்லார்க்குநல்ல குலோத்துங்க மைந்தனெட் டொன்றுநூற்றில்
கல்லாதரவுசெய் மருந்திற்பலகுண நாட்டிவைத்தார்
பொல்லாத கூத்தனை நீறுக்கவேயிந்தப் பூமகளா
நல்லாளை நின்றஞ்ச மென்றே விடுத்தன நடுவெளியே. (14)

கொலைபூடனுண்ட கொடுங்கோலைவேடன் கொலைநடுவில்
பலையேடிலாதி யருட்காட்சிகாட்டும் மானர்குல
நலமாடு கன்னியைப் புலிபாம்புதீயி னடுவிலுன்முன்
விலையாக விட்டனஞ் செழுகேசர்தஞ்சநீ மேவுவையே. (15)

மதமேவுயானைப் படைசேதுராயன் வதைமுடித்த
பதமேவுவிக்ர நிறைந்தார்கள் குன்றும் பருவமதில்
கதைமேவு கூத்தன் உடன்ராசன்சேரக் கனனிதழல்
சிதமேவுந் தஞ்சம் புலியீசர்தாளிணைத் தேனதுவே. (16)

குருமாது தாயைப் பிறந்தானைக் கூடிக்குலாவிசித்தம்
வருமாசுரர்கொரு பிரமாணம்வாங்கிக் குடியேற்றிவைத்த
பெருமானிறைந்த வயனம் ரெண்டாயிரப் பிரங்கனுள்ளார்
திருமாதுகன்னி மெய்ச் செழுகேசர்தஞ்சநின சேவடிக்கே. (17)

ஓயாத செங்கோல் இராஜேந்திரனுண்ட வொன்பதனில்
வாயாத வெல்லா முடையாரையிந்திரன் மறைத்துவைத்த
காயாதி காட்டும் வடாக்கரே யெங்கள் கன்னிதன்னை
தாயாகத் தஞ்சம் வைத்தோஞ் செழுகையின் ஞாயகமே. (18)

காடெலாம் வெட்டிச் சிவபரஞ்சோதியைக் கண்டுதொழ
நாடெலாங் கோயிற் புதிதாக்குஞ் சோழனை நடுராவினிலே
வீடெலாங் காட்டு மகலாத வாழ்வுடை வேங்கைதன்னை
பாடெலாஞ் செழுகைப் புலியேறுதஞ்சமிப் பாவையர்க்கே. (19)

வங்கிசாதிதீபன் பத்துநூறுண்டில் வளர்ந்த செங்கோன்
மங்குலாதியாமம் வழிகாட்டு சோதிவடாக்கர் வந்தார்
எங்குலாதியொளிவி லொடுக்கமுள்ளார்தவத் தின்மகவை
நங்குலாதியீச னடிதஞ்சமேபுவி நாயகமே. (20)

தென்னன்புரந்தர பூபர்க்குமந்திரஞ் செய்துவரும்
பொன்னன்றனக்கு மகன்மாமன் மைந்தன் பொருவேலுடையார்
துன்னுங்கொடியவல் லாசானைக கொன்றவித் துரைகுமரி
தன்னைச் செழுகைப் புலியீசர்தஞ்சத்தின் சார்பதுவே. (21)

செனமேச ஞயிரத் தைம்பதிற் சடாமுனி செய்யசிரந்
தனைவீர சாமந்த னேழாந்தலைமுறைச் சங்குகொண்டார்
மனமேவுமங்கையைத தீயிலவைததார் சர்ப்பம் வந்துவந்து
கனன்மேவிநிற்பதை யென்சொல்லுவேன் றஞ்சங்கன்னியற்கே.()

எல்லாக் கலைகளும் வல்லார் முடத்திரு மாறனென்போன்
சொல்லாற்பழுமரப் பொம்மையைப் பேசவுஞ்சொன்னவர்கள்
நல்லாரருள்வழி மாமுனியோர்குடி நங்கைதன்னை
வல்லார் செழுகையிற் புலியீசர்தஞ்சநீ வாழ்த்துவையே. (23)

கவியரங்கேறிய வாகுணபாண்டியன் காலமதில்
புவிதனிற் சுபானந்த விதிவிலக்காற்றிய புலவர் தங்கள்
சிவிகையை விட்டிந்தத் தீமுன்னர் நிற்குமிச் சேயிழையை
அவிதில்லை செழுகையிற் புலியீசர் தஞ்சமிங் காகுவதே. (24)

தேசாதிதேச மிறைவாங்கும் விக்கிரமச் சேமனிடம்
பேசாதுபேசி வரிகேக்கும்வாசகப் பிரியமுள்ளார்
தூசாருமங்கை தழனீக்கிநிற்கிற் றுயரேசெழுகை
ஈசாநினது விருதாளின்றஞ்ச மிவடனக்கே (25)

ஒருநாட்சுயம்பை மறந்தேசுகுண றுணவுசெய்ய
இருநாள் விசும்பி லசரீரிதென்ன டினிமுடிவென்
றிருமாலுமூருந் தமிழ்ச்சங்கம் போயுமிலங்குகுடிப்
பெருமாட்டி செழுகைப் புலியிசர் தஞ்சமிப் பேருலகே. (26)

பூதங்களைந்துந் தன்மானங்காக்கும் புரவலரும்
வேதங்களன்றி வேறொன்று காண்கிலா மெய்விரதர்
பாதங்கள்கோட்டை மதிலேறவைத்தும் பரிகடலின்
போதங்கள் தஞ்சம் புலியிசர்பாதம் புரப்பதுவே. (27)

எட்டுநூறாண்டு இருந்தான் முடத்திரு மாறனென்னுங்
கட்டழகோன்முது மந்திரிமாரொடு கலந்துசெய்த
பெட்டமல்யாக மூவேந்தர்பிந்தி வளர்ந்தகுடி
கட்டழகாளே நின்றஞ்சம் வைத்தனங் கார்புலியே. (28)

செங்கதிர்தீப மகத்தழன் மூன்றையுந் தெய்வமென்று
பொங்குஞ் செழியன் சித்ராவிரதற்குப் புத்திசொல்லு
சங்கின்பிரானுடை யார்வழிக்கன்னியிச் சங்கடத்தில்
பொங்குந் தழன்முன் வைத்தோஞ் செழுகைப் பூசுரனே. (29)

மூன்னாளரசன் புரம்பாட்டிமக்கள் முடிப்பொழித்த
பொன்னாபரணப் பதைக்கங் கண்டோர்கண்ட பூவுடையார்
பின்னால்வருகன்னி நின்றஞ்சமென்றுவிப் பெரும்புலியூர்
முன்னால் விடுத்தனஞ் செழுகேசர்தாளிணை முன்றிலுக்கே. (30)

மூவேந்தர் தங்களிற் செம்பியன்றன்னையு முன்வளர்த்த
பாவேந்தர்கோவிற் கொடிகட்டும் வேளையப் பார்மன்னன்போற்
பூவேந்தி வந்தாய் பொற்கைக்குமரியைப் பொற்றழலின்
நாவேந்தவிட்டனஞ் செழுகேசர் தஞ்சத்தை நாடுதற்கே. (31)

பொன்செய்தவாரியர் கைத்தொழிற்சிக்கிர பூபதினன்
மன்செய்தமந்திர மருளுடையார்தங்கண் மனதில்வைக்கப்
பின்செய்த கற்பின் மடமாதர்பெண்ணைப் பெருநெருப்பின்
முன்செய்த தஞ்சம் வைத்தோஞ் செழுகை முதல்வனுக்கே (32)

பொன்னுநஞ்சிக்திர சேனனென்பான்மனப் பூவுடையார்
தன்னுளிற்கற்பின் சுயம்புடையார்மனச் சாட்சிதனை
முன்னடிச்சாமி யாரேடக்காட்டு முதல்வர்குடிப்
பொன்னுட குத்தஞ்சம் புலியிசர்தாளிணை பூப்பதுவே. (33)

இலங்காபுரியுள வாரிபப்பெண்ணை யிருவடிகன்
விலங்காதசேலை யுரிபோதுவிண்ணவர் கைவிடவும்
கலங்காத கற்பின் மடவாரைபெண்ணக் காத்தவரின் [விலே.
குலங்காணுங் கன்னியைத் தஞ்சம்வைத்தோம் செழுகைக்கோவி

இராசமாத்தாண்டன் கொற்கையிற் செங்கோ னடக்துகையில்
தராதலத்திச னிருப்பதற்கோர்மடங் கங்கள்கையால்
பராவியபோதுவுலகெலாஞ்சுத்தப் படுத்தவைத்த
நிராவியர்மாதைத் தஞ்சம்வைத்தோம் செழுகை நிருபனுக்கே. ()

ஒருநாளிரவிற் கனவிற்சவடி யொருதிகண்டு
குருவாற்கருங்க லுடைத்தேறவூக்கங் கொண்டவர்கள்
கருவாய்ப்பிறந்த கன்னிக்குத்தோஷங் கழித்துவிட
வருவாள் செழுகைப் புலியிசர்தஞ்சத்தில் வாழ்வதற்கே. (36)

சிங்காசுரனெனு மரக்கனொருநாட் டென்கொற்கையிலே
சங்கூதுபோரி லரசனிழைக்கவுஞ் சார்ந்துகொன்ற
பொங்கோதவுக்ர முடையாரின்கன்னியைப் பூந்தழல்மு
னிங்கேக வைத்தனஞ் செழுகேசர் தஞ்சங்களேற்பதற்கே. (37)

குலசேகரன்முதன் முப்பத்திரண்டாங் குலமுறையிற்
பலகோடிபொன்கள் கொற்கைக் குறும்வழி பார்த்துவைத்த
தலசேகரன்வழி தோன்றுமிம் மாசிலாத் தையறன்னை
நலமானசெழுகைப் புலியிசர் தஞ்சத்தி னட்டினமே. (38)

பதினேழு நூற்றிற் பிரவிடனென்னுமோர் பாண்டியனை
மதியோடுவாழ முடிசூட்டிச்சேனை வளைத்துவைத்த
பதியாடுகொண்டார் வழித்தோன்று பொன்னைப் பரன்செழுகை
விதிமாலர்காணாப் புலியீசர் தஞ்சத்தில் விட்டனமே. (39)



காசிக்குச்சென்று வரப்போனமாமறைக் கயமுகற்கு
பேசிக்கொடுத்த வாயிரத்தெட்டாம் பிராமணனை
யீசர்க்குதித்த மகனென்றுகாட்டு மிளங்கண்ணுடையார்
நேசக்குமரியைப் புலியீசர் தஞ்சத்தி னிருத்தினமே. (40)

மேனாட்டுப்போகர் வருவேளை கொற்கையில் விரைந்துகொண்டு
நாநாட்டுவானக் கிரகாதிநூலை நடுச்சங்கமதில்
மேனாட்டுமந்திர மொருகோடிகற்றவர் மொய்குழற்கு
மானாட்டுசெங்கைச் செழுகேசர் தஞ்சங்கண் மாணிபமே. (41)

என்னாளும்பிச்சைக் கிரப்பார்க்குவீடுக ளில்லையென்று
சொன்னார்க்குக்காட்டி லொருநாளுணவைச் சுயம்பளித்து
முன்னால்வரத்தன் றுயரோச்சிமுத்தி முடிவர்மகள்
பொன்னாள் செழுகைப் புலியீசர் தஞ்சத்திற் போக்கினமே. (42)

வேதியன்வீட்டுக் கபாடத்தைத் தொட்டகை வேறிரண்டாய்
நீதியில்வீட்டிக்கற்பார்வரத்தினி னீண்டபொற்கைச்
சாதியமைச்சர் குமாரிக் கொருநெறி சாற்றலிலை
மாதுக்குத்தஞ்சஞ் செழுகேசர் தாளிணைமாத்திரமே (43)

வேதியர் சொற்படி விக்ரமத்தென்னன் வேறுபுதுச்
சாதகஞ்செய்யக் கற்புடையார்மொழி தலையுடைக்குங்
கோதையர் கால்வழிப் பொன்னுளையக்கினிக் குரிகள்வைத்தோம்
நீதவரிற்பினை யார்காக்கவல்லவர் நின்றஞ்சமே. (44)

தந்தைக்குச்சொர்க்கங் கொடுத்தார்தமக்குந் தனிக்கொடுங்கோல்
சிந்திக்கப்பஞ்சங் கோலாகலனொடு தீயுக்க
அந்திக்குளிவ்வூ ரழைத்தாயிதுவனா யாதரித்தாய்
வந்திக்குங்கன்னிநின் றஞ்சஞ்செழுகையில் வாழ்பவனே. (45)

யதுலவிக்கிரேசனைக் காணுதுசெழுகையை யடுத்தபல்லூர் [தாய்
குதிகொள்ளகமேகோட்டைக் கிழார்க்கானசெல்வங் கொடுத்தளித்
மதிகொண்டசென்னிப் புலியிசர்தாளிணை மங்கையர்க்கு
விதியென்றுவைத்தனந் தஞ்சமிகுதன்றி வேறில்லையே (46)

இருபத்துமூன்று நூற்றாண்டினிற்பூடண னிருமதுரை
யரிவைத்தவிசுராப் பாம்பாலடிமதி லாகஙையிலே
குரிவைத்தபூசுர ரென்றேயமைச்சைக் குரித்தவரின்
திருவைத்தென்புலியூர்ச் செழுமேசர்தஞ்சத்திற் சேர்ப்பதுவே ()

குடநாடுகொற்கை நடுச்சங்கநூல்களைக் கொண்டுகவி
வடமாமதுரையி லெமமோர்புலமையை வகுத்துவைத்து
நடமாடுசம்புச் செழுகேசருன்ற னயனவருட்
கிடமாகவிட்டனங் கன்னிக்குத்தஞ்சமினி வேறில்லையே. (48)

அறுசீர்க்கழினெடிற் சொல்லுங்கிழார்க ளறுவரையு
மொறுசீர்ககழிலேயு வென்றதுண்டோ விந்தவுலகமதின்
மறுகாற்சலததிற் கொலைகேட்டகூத்தனை மண்டையுடை
பெறுநாள்வரையுந் தஞ்சஞ்செழுகைப் பெறும்புலியே. (49)

நாற்பத்தியெட்டாந்தலை முறைபிரதாப நடனெடு
பாற்பட்டபுத்த னெருமார்க்கங்கண்டு பகர்ந்திடுநாள்
வாற்பட்டிசைவச் சிவநாட்டஞ்செய்த வணிகர்குலக்
காற்பட்ட தஞ்சஞ் செழுகைப்புலியிசர் காட்சிகளே (50)

பனையாத்திவேம்புக் கொடியார்கள்பூமி பங்குவைக்க
மன்மாற்றிகைப்போர் முக்காணியனறிமற் றவைகளெல்லாம்
மினமாற்றிச்செப்பி லெழுத்தாக்கிவைத்தா ரிவர்மகவை
தினமாற்றிக்காககச் செழுமேசர்தாளிணைச் செம்மலரே. (51)

முத்தனைப்பேருள்ள வங்கிசேசர்காலத்தின் முதுக்கெண்ணிப்
பத்தரொருகொலை பெரும்பாதியானையும் பட்டுவிட்டாற்
கர்த்தன்சௌந்தரக் காய்சினவழுதியைக் கையமைக்குஞ்
சித்தக்குமரியைச் செழுமேசர்தஞ்சத்திற் சேர்த்தனமே (52)

சம்பக்கிரான் காங்கலை வங்கிசசிரோமணி யடிமிகைக்கச்
செம்புச்செழுகையின் மாசோசைகேட்டவச் சேயிழையை
யம்புக்குமலி வளிக்காயிசினை யகற்றிவிட்டா
லெம்புக்கிதஞ்சஞ் செழுகேசர்தாளினை யென்றென்றுமே. (53)

விலக்கியுங்கேளா வெக்காளக்கிமோனை வெறுத்துவிட்ட
குலத்தவசேந்திரன் சங்கேதகங்கிரவிக் கோட்டையரின்
இலக்கணங்கூறச் சிவசம்பகொண்டவிவர் மகளை
யலக்களிக்தாற்புலி தஞ்சஞ்செழுகையி லப்பனுக்கே (54)

இன்னஞ்செழுகைக் கோட்டைக்குட்கற்ப விருப்பதென்றால்
மன்னுந்திவலை மழைபெய்யக்கேட்டவங் கிசபூடருக்குச்
சொன்னமொழிக்குண் மூந்நூற்பொங்கச் சுரங்கனிங்கக்
கன்னிக்குவொன்றுங் கிடைத்திலையே தஞ்சங் காட்டுவையே. (55)

முப்பகநூறிற் சோமசூடாமணி மடிபெறுநாட்
கைப்பொருள்கூவந் சிவலிங்கமாதியைக் கண்டெடுத்தா
செப்பொருவொண்ணெனிலைகோறுங்கைகூ டிவர்மகளை
யெப்படிக்காப்பையோ நின்றஞ்சஞ்செழுகையி லீசுரனே. (56)

தேருருசிக்கிளை யாற்றுக்கிருநாட் சிறுமகளை
காரளர்கைவிட் டார்கின்றவேளை கனைக்கெடுக்க
வருநகோருங் கிரிபோகுகோயிலி னுள்ளிருந்து
பேருருசொன்னவெஞ் செழுகேசர் தஞ்சமிப் பெண்மகட்கே (57)

கல்லாவெரிந்து மரத்தோடிறந்தவோர் கம்மியனை
வெல்லார்கடவு ளெனச்சொல்லுமையர்கள் வெந்துசெந்திப்
பொல்லாப்பிலாழ்த்திப் புகச்செய்தகோட்டையர் பூங்கழற்கு
சொல்லார்செழுகைப் புலியீசர் தஞ்சங்கள் சொல்லுவமே. (58)

சூடாமணிக்குல மன்னர்க்குமந்திரஞ் சொல்லுகையில்
வாடாமலர்த்தமிழ் வடக்கேமதுரையில் வந்தகச்சி
யேடாவினிய் மொழிபாற்செயித்தவிக் கிழார்மகட்காப்ப
[illegible] பொற்பினிடமே. (59)

குலவிசவுக்கிரப் பெருமாறனென்றொரு கோமகனு
நலவூர்கிழார்களுஞ் செழுகையினின்றனர் நாப்பழகு
கலையூறுசங்க மழிந்தேபிராமணக் காட்சிதந்த
கொலைபோலுமல்லவிக் கன்னியைத்தஞ்சநீ கொள்ளுவையே(60)

ஆயிரமாந்தரைக் கொலைசெய்யநோற்குமோ ரந்தணனே
யேயங்கள்கொண்டு சிரம்ரெண்டுதுண்டாய் செரித்தவரின்
மாயங்களெத்தனை கூத்தன்செய்மாயத்தை மாற்றுதற்கு
பாயங்கள்தஞ்சம் புலியீசர்தாளிணைப் பாடுவதே. (16)

பல்லாண்டுநோற்ற தவசியைக்கொன்றதுற் பாவம்வந்து
எல்லார்க்குந்தீமை விளைந்ததென்று ரிறைமார்களொடு
பொல்லாப்புவந்ததும் புலியீசர்தாளிணை போக்குமல்லால்
வல்லார்க்குவல்ல வபிராமிதஞ்சமும் வைத்திடுவோம். (62)

கொண்டார்நிறைந்தார் கெடார்கணைக்காரர்கள் கோத்ராகுப்தர்
உண்டாருடையார் காத்தார்களானந்த ரூக்கர்கிழார்
கண்டாடுகாமங்க ளீராறுபெற்றவிக் கணனியனைத்
தொண்டாகக்கொள்வதும் புலியீசர்தஞ்சமுந் தோன்றுவதே(63)

அறுபத்திநாலாந் தலைமுறைப்பாண்டிய னரிமர்த்தனென்பான்
அறிவித்தகிழார்களுக் கதிகாரநீக்கிய வன்றுமுதன்
மறிவைத்தகையன் றுணைநீங்கவேறொரு மார்க்கமில்லை
கறிவைத்ததஞ்சஞ் செழுகேசர்தாளிணை காப்பதுவே. (64)

மூதூரின்முப்பத்து மூன்றுநூற்றாண்டின் முடிதரித்த
காதேறுவிக்கிரமன் கூத்தியாண்மைந்தன் கடுவழக்கிற்
போதாதுசெய்தான் விதிவழித்தோன்றுமிப் பொன்மகட்கு
வாதாரமியாரு செழுகேசர்தஞ்சங்க ளாளுவதே. (65)

மாசிலாமங்கையைப் புளியடித்தீயினில் வைகுதோறும்
ஆசிலாச்செவ்வர வெழுநேரம்வந்துவந் தவிழ்ந்ததன்றித்
தேசுலாக்கைவசி கழுத்திற்பூமாலையாய்ச் சேர்ந்துநின்று
வீசுரா வென்சொல்வோங் கன்னிநின்றஞ்சத்தி லேற்பதுவே.(66)

பெற்றாளைப்பெண்டுசெய் முறையிலாவாசுரப் பேய்மகற்கு
நற்றாளளிப்பது ஞாயமுண்டோவிந்த நாட்டகத்திற்
கற்றார்புகழுஞ் செழுகேசர்கன்னிககுக் கைவழக்குச்
சொற்றாரிறககவும் மங்கைக்குத்தஞ்சமுஞ் சூட்டுவையே (67)

இராசாதிராசன் வீரபாகேந்திர னாடுதனிற்
கூசாதஞானக் குமரேசக்காங்கையன் கொண்டசீர்த்தி
தேசாதிதேச மெல்லாம்புகழ்ந்துமிச் சேயிழைக்கு
ஈசாவிதுவணைப் பார்த்தோநின்றஞ்சங்க ளேற்பதுவே (68)

பூதலமேழையுஞ் சேரவங்கிசேசன் புரந்திடுநாட்
காதன்மகளுமை யடிசேரமைந்தருங் கானங்கொள்ள
மாதுலனாகி மருமானுக்காக வழக்குரைத்த
போதகனேதஞ்சஞ் செழுகேசர்தாளிணை பூவையர்க்கே (69)

கோட்டைக்குள்வாழும் மடமாதர்கற்பின கொழுநெருப்பு
நாட்டெக்குள்வாழுங் கூத்தன்றனக்கொன்று நாடுதில்லை
விட்டுக்குள்வாழும் பொன்னாளையித்தழல் வேண்டிற்றென்றால்
காட்டுக்குள்வாழும் புலியீசர்தாடஞ்சங் கன்னியர்க்கே. (70)

நீரெல்லாமுத்து நிலமெல்லாம்பொன்னு நிறைந்தசிந்தின்
பாரெலாம்புரந்த செழுகையூர்ச்சிக்கர் பதியைவிட்டு
வூறலாங்கொற்கைக் கழைத்தாளுஞ்சம்பு வுதவியிதோ
தேருலாஞ்செழுகைப் புலியீசர்தஞ்சமிச் சேயிழைக்கே (71)

நக்கர்தங்கோவி லாவணிமூலத்தி னாட்கொழுநாட்
புக்கியமேடையிற் கோட்டைமண்போட்டவன் போனகையிலே
சுக்குடன்பால்கொடுத் துமையாளைக்சண்டவித் தூயமகள்
பக்கலினீதஞ்சஞ் செய்வாய்செழுகைப் பரமேட்டிகளே. (72)

பொன்னாட்டுவேந்தரும் பூநாட்டுமாந்தரும் போற்றிசெய்யக்
கன்னாட்டுஞ்சம்புச் சதுர்வேதமங்கலங் கண்டுகொண்டு
சொன்னாட்டுஞ்சோதி யூக்காரின்றன்கிளைத் தோகையுந்தன்
முன்னாட்டுசெந்தி செழுகேசா தஞ்சத்தின் மூட்டுவமே. (73)

ஊரின்கிழக்குக் கடலோசைகேட்டது முத்தமியர்
நேரும்பொழுதழ கேந்திரபாண்டிய னாகநின்று
தேரும்புவியை யழியாதுகாத்திடச் செய்தவர்தம்
பேருங்குழவியை யார்தஞ்சங்கொள்வார் பெருப்புலியே (74)

தேவேந்திரன்றன்னை மதியாதகுற்றங்க ளருமட்டும்
காவேந்தனக்கர் திருப்பூசைசெய்திட நாடுதருக்
கோவேந்தகம்மக முநவேறச்செய்தவர் கோதைதன்னை
நீவேர்ந்துசெம்புலிச் செழுகேசர்தாடஞ்சந் தெய்வங்களே. (75)

மாலோன்றிருமணிச் சோறுடுநெற்றியின் மண்மண்ணென்று
கோலாகலஞ்சொலும் லோகாயிதர்களைக் கொன்றுதங்கண்
மேலாம்பதவியை நாராயணனென்று விள்ளுகுலக
காலாங்குமரியைப் பாஞ்சாலிபோற்றஞ்சங் கார்புலியே (76)

விண்ணோர்கணிதத்தை மண்ணோர்க்குவாயுளின் விதிகளென்று
உண்ணோக்கிச்சோதிட நூற்சொல்லுமைந்தா டுடையவனைப்
பண்ணோக்குமாண்டு பனிரண்டுபஞ்சத்திற் பார்த்தவரின்
பெண்ணாட்குச்செம்புலி செழுகேசர் தஞ்சத்தைப்பேசணுமோ()

வேதாந்தக்கோகமன் தேவேந்திரற்குரு வேறழித்து
நாதாந்தமெவ்வுயிர்க் கொலைநீக்கலென்றொரு நன்மைகொண்டு
போதாந்த யோகத் தவஞ்செய்தபொற்கைப் புரவலரின்
மாதாந்தப்பொன்னினைச் செழுகேசர்தஞ்சத்தில் வைப்பதுவே. ()

தீயோடுசெங்கதிர் மண்மரம்பாம்பினைத் தெய்வமென்று
வாயாடுமாக்கற்க கண்டமேசுயம்பிவை வணங்குமென்று
தாயாமகத்தியன் றனைகொண்டுகாண்பித்த தந்தைதமக்க
ணேயாசெழுகையிற் புலியீசர்தஞ்சத்தி னிற்பதுவே. (79)

கொன்றுனிரைந்திடுங் குருதியைத்தின்றிடுங் கொள்கைவைத்து
நின்றார்புலிகளும் பூசையுஞ்செய்திடு நீசமதை
வென்றுற்செயமெனப் புத்தரையோட்டியே விட்டுவிட்ட
மன்றார்மகளினைச் செழுகேசர்தஞ்சத்தின் வம்மின்வம்மின் (80)

மூதூரையாண்ட தடாதகைமாறன் முறுகாய்சினத்தேதீன
காதூரும்பூசுரன் மூன்றுநாராண்டிற் கடிந்தவனை
வாதூரும்போழ்தினி லடித்தார்கள் வங்கிச மங்கையென்று
நீதூரவிட்டிடி லியார்தஞ்சந்தில்லையி னிற்பவனே (81)

அரசர்க்குத்தோசங்க ளாறுலுமாணிக்க னடுத்தடுத்து
வுரைசெய்யும்வேதத்தின் சைவசித்தாந்தத்தையொப்பவைத்தார்
தரைசெய்ததேசங்கள் கூத்தன்வழக்கினிற் றாழவிட்டா
லுரைசெய்யும்வகையும் புலியீசர்தஞ்சங்களொப்பனைக்கே (82)

கோவேந்தர்கொற்கையிற் கோட்டைநின்றாடிய கூத்தையெல்லாம்
பாவேந்தர்பாடிப் புகழ்ந்திருந்தாரந்தப் பாடலெல்லாந்
தீவேந்தவிக்ரம னோடுகுன்றிடிற் சேதியென்னே
நாவேந்துசெம்புலி யீசாவிவடஞ்ச னாளினைக்கே (83)

கொண்டாடுந்தேவரும் மறைவாடைபயிர்களுங் கூடுசெய்வ
முண்டாவதொண்டொடி கற்பாலெனச்சொல்லு மொண்மறைக
டொண்டாடுமிக்கிழார் வழிநேருயபொன்னினைச் சுடரகற்றில்
நண்டாடுந்தென்செழு கேசாவிவடஞ்ச நாமுனக்கே (84)

பத்தொன்பதாறு வழியாறுதாளப் படைகள்பத்து
மித்தொன்பதாறு மலித்தானுரிச்சொல் லியற்றியவன்
மெய்த்துன்பநீவி ரடைமுன்னங்கொற்கைக்கு மீளுமென்று
னெத்துன்பங்கன்னிக்கு வந்தாலும்நீதஞ்ச மீசுரனே (85)

சல்லாலுந்தெய்வக் கருணாகரநிறை காண்டிபன்றன்
வில்லாலும்வெள்ளி மலைமீதுபட்டதை விட்டுவிட்டுச்
சொல்லாறுந்தில்லையிற் றெய்வமென்றேயுன்னைச் சொல்லுதற்கே
கல்லானைநின்றஞ்ச மேற்பாய்செழுகையி னயகமே (86)

பேராயிரம்பிள்ளை பெற்றாலும்பொன்னினைப் போலொருபெண்
சீரார்திருவுமை நாககாளருந்ததி செப்பிலுண்டோ
கோராகநின்றழல் வீழ்ந்தாளெழுதர சேற்றுமின்றும்
பாராரொருவரு மீங்கில்லைதஞ்சநீ பாவையர்க்கே (87)

குணங்கொண்டார் தங்கிளைக் கோமாட்டி மைந்தரிற் கோவரவும்
பணங்கொண்டார் செழுகையிற் பாலுண்டு சங்கரன் பாலிலெய்தி
மணங்கொண்டார் மங்கைக்கு வமுதுண்டநன் றிக்குவந்து தென்றால்
கணங்கொண்டார் செழுகையிற் புலியீசர் தஞ்சத்தைக் காப்பதெ
ன்றே (88)

உழும்போது பொன்முடிப் பொன்றுகண்டாரங்கு வடனிருந்த
விழுமபேறு சென்னியன் வேட்டியென்றே யதை விட்டுவிட்டு
தொழுமபோது தில்லையி னடுவீட்டில் வாங்கிய தோகையழல்
விழும்போது விட்டிடில் யார் தஞ்சஞ் செழுகையின் விண்ணவனே ()

ஏர்பூட்டித் தின்பொரு ளெல்லாம் விளைவித்து வெவ்வுயிர்க்குஞ்
சீர்பூட்டிக் காக்கிடு மேழுபத்தொன்பது செல்வர்களில்
பேர்பூட்டுங் கோட்டைகிழார் வழியுற்றிடும் பெண்மயிலை
யார்பூட்டிக் காப்பர் செழுகேசர் தஞ்சத்தி லாகுவதே (90)

நாடாளுந் தென்னற்கு மாமுடி சூட்டவு நல்லமைச்சு
தேடாமற் சொல்லவுந் திரவியஞ் சேர்க்கவுந் தெவ்வர்களை
யோடாமலோட்டவும் பெற்றோமிதுவரை யுபருருபெண்
சூடாமலர் புலிச் செழுகேசர் தஞ்சத்திற் சூட்டுவதே. (91)

பாரவேந்தரன்றிக் கெடுபோழ்து வெக்கியம் பண்ணிவைத்து
யார்வேண்டி விக்ரமன் முன்னேனைவைத்ததை யார்நினைந்தார்
நீர்வேண்டுமென்றுவிவ் வூரிற்கொடுவந்த நேரிழையைத்
தார்வேண்டலன்றி நின் றுணைத்தாளின் றஞ்சத்திற் சாற்றுவையே

நீர்கொண்ட வேட்டத்தி னணிபாபரணத்தை நீணிலத்தோ
ரூர்கொண்ட கேலியை மருந்தாற்குரித்திதை யுண்மையென்று
பேர்கொண்டமார்க்கமுஞ் சைவசித்தாந்தமும் பேசுமுத்தர்
வார்கொண்ட கன்னியைச் செழுகேசர் தஞ்சத்தில் வைத்தனமே ()

அணிலோடு தென்றெரும் வலம்புரிச்சங்கமு மருவிவிழும்
மணியோடைக்குன்றுக ளாயிரத்தெட்டுரை மண்டபமும்
பணியோடெழும்புளிப் புலியீசர் தாள்களும் பார்ப்பதற்குக்
கணியானும்வந்தில னிவளோடு தஞ்சநன் காடுமட்டே (94)

ஆண்டானும்பண்ணையு மானேஞ்செழுகையி [illegible]
வேண்டாதகூத்தனும் வேண்டுமென்றூற் பகலிருளவேறுமல்ல
மாண்டாலுநல்ல சுகபோகமுண்டிந்த மங்கையரை
வேண்டாத்தழலுக் கென்சொல்லுவேன்றஞ்சம் வேண்டுவையே()

எல்லார்க்கும்வல்லவ னென்றேயுனைத்தொழு மீசுரனைக்
கல்லாலுஞ்செய்தது வேறில்லையென்பதைக் காட்டிவிட்டாய்
பொல்லாதபாவிக்குஞ் சொல்லாதசொல்லெந்தன் புன்செவியில்
கல்லாப்புகன்றது தீர்வதற்கேதஞ்சமிக் கன்னியொன்றே. (96)

வீட்டிற்பொருந்திய விளக்கேயெரிகின்ற வேளைதனி
னாட்டினிற்கிடக்கின்ற பொருளொன்றுங்கைதனி னாடைவில்லை
காட்டிற்றனித்தனி யிருசாமவேளையிற் கடருகின்றேங்
கூட்டிச்செழுகையிற் கோயிலுட்கன்னியைக் கொடஞ்சமே (97)

ஆத்தாளுனக்கினி யாத்தாள்வருகுவ ளவளோடுவரக்
காத்தாள்செழுகையிற் கோயிலிற்குள்ளிருகண் ணீர்ததும்பப்
பார்த்தாளவந்தது மினிப்போதும்போதுமிப் பாரமெல்லாஞ்
சீர்த்தாமரைக்களக் கொற்கைக்குவெம்மொடு சேருவையே. (98)

இருபத்திரெண்டுநூ றாண்டினிற்செழுகையி லெய்தியயா
மொருபத்திரெண்டுநூ றாண்டதிகாரமு முயர்வுமெய்தத்
தருபத்திரெண்டுநூல் பனிரெண்டிலொன்றிவ டையறன்னைக்
குருபத்திரெண்டுமை யம்பிகாநின்றஞ்சங் கொள்ளுவையே (99)

ஆத்தாள்சுயம்பி லடியேனிதுவரை யறைந்ததெல்லாம்
மாத்தான்படையுங் கூத்தனுங்கோட்டையு மாண்டுவிடப்
பாத்தார்புகழவுங் கன்னிக்குங்காட்சி பரப்பியினிச்
சீர்த்தாமரைக்குளக் கொற்கைக்குவெம்மொடுசேருவையே (100)

விண்ணோர்புகழ்கின்ற வேதாந்தசிற்பத்தை விளக்கிவைத்த
கண்ணாகாங்கையன் றன்மகன்செங்கிழார் கண்முனிநத
பெண்ணுளைத்தியி லெழுதரம்விழ்த்தியும் பேதைவந்தாள்
கண்ணுறக்கண்டதை வாயாற்பலருக்குங் காட்டினனே (101)

முற்றிற்று.



இப்புத்தகம் பெற விரும்புபவர்கள் பின் வரும் விலாசத்திற்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம்.

**I. சங்கரசுப்புபிள்ளை**

தமிழ்ப் பண்டிதர்

கால்ட்வெல் ஹைஸ்கூல்

தூத்துக்குடி.



**K. சங்கரலிங்கம்பிள்ளை**

எ. மு. உ. கா. மெர்ச்சென்ற்

தூத்துக்குடி.



**S. அருணாசலம்பிள்ளையவர்கள் மகன்**

பேச்சிமுத்துப்பிள்ளை,

முடிக்கானேந்தல்,

சாயர்புரம் போஸ்டு.

